செழுவு மாசகல் கட்டத்தப் பிரமமைக் கியமே
யுழுவ லன்புகொண் டூறுபசு பதிகள்சம் யோகர்
தழுவு மின்னன தத்தம நெறிமுறை சாற்று
மழிவி லாச்சிவ சாயுச்சி யம்பெறற் கமைந்த. (கஎஉ)

உத்த மோத்தம மிபஞ்சிவார்ச் சனையென வுலகோர்
வைத்த லத்தினு மலகத்திற் கண்டுளக் தணிந்து
மெய்த்த பத்தியிற் சீலத்தின் விதியினிற் புரிந்தே
யொத்து மாசறுத் தனடிப் புகுதபே ரின்பம். (கஎங)

உற்று வாழ்வுறக் கருதியிவ் வொருபதி முதலா
மற்று மிப்புவி யிடைப்பல தலங்களின் வதிந்து
முற்று மந்திரங் கிரியைபா வனைவிதி முறையிற்
கற்றை வேணிபூ சனைபுரிந் தினிதுகாட் டிடவும். (கஎச

வேத வாகம புராணங்க ளாதிய வியனூல்
சாதுர் மாமறை யத்தங்க டன்னிகர் தானு
மேதை யாகமாந் தம்மெனு மெய்கண்ட சுருதி
சீத நால்வர்வாக் காதிய திராவிட வேதம். (கஎரு)

பன்னு மின்னமெய்ந் நூலெலாம் பதிப்பொரு ளொன்றே
யுன்னு மப்பதி யுமாபதி யேயுவன் றனே
முன்னு சாருவ வியாபக னனாதிமா மூத்தன்
கொன்னு டைச்சரு வஞ்ஞதை யாதிய குணத்தோன். (கஎசு)

அவனை யல்லவ ரரிபிர மேந்திர ராதி
திரியர் மானுட ராதியர் யாவருஞ் சீவ
ருவரி நீர்புரை வியாப்பியர் சிற்றறி வுடையோ
ரெவரு மாற்றல்சா லனாதிமா மலபெத்த ரெனவும். (கஎஎ)

அம்ம லத்தவ ரீங்கியல் வான்மகோ டிகடாஞ்
செம்ம கத்தவ சிவத்துவப் பேற்றினைச் சேர்ந்தே
யம்மை யப்பனு யமர்ந்தரு ளவ்வா னடிக்கீழ்
மெய்ம்மை யுற்றுவாழ் பேரின்ப மேவுதற் குரிய. (கஎஅ)

சிறந்த காரண மகம்புற மிரண்டினுஞ் சிவனை
நிறைந்த வன்பொடு காடோறு நியதியிற் புரியும்
விறந்த தொண்டெனுஞ் சிகார்ச்சனை யென்னவு மேவா
யறைந்த வாருயிர் போதுமீ திவ்வழி யறவீர். (கஎகூ

ஆவி சேர்ந்திய வாசமே யொப்பன வாக
மேவு மேனைய தலமெலாம் விபலமா மெனவு
மோவி லாதுபன் முறைமுறை கையெடுத் துரைத்தே
யாவு மீன்றவ ளியற்றியின் இலகுறக் காட்டும்.  (கஅ0)

சேரில் பூசனைப் பெருமையை விளக்கவு நிலையா
யாரு மம்மரி னுய்த்துணர் வின்மையி னானே
சோரு மாந்தரை மருட்டுவெஞ் சகத்தினோ டணியே
மோரி னும்பிர மம்பிறி தில்லையென் றுரைத்தும்.  (கஅக)

பினைய கண்டித மாம்பரி பூரண பிரமந்
தனையொர் மூர்த்தியிற் கண்டிதப் படுத்துதா பனமாம்
வினைய பூசனை புரிபவ ரறிவிலா வீண
ரெனவும் பூசகன் பூச்சிய னென்றிரு பொருள்கள்.  (கஅஉ)

இன்ற தாகலிற் பூசனை யாற்பயன் யாதோ
வென்றும் வானா கிருண்மல பந்தமே மோக்க
மூன்றி கழ்பொரு ளியாவையு முயலிடத் தலவை
யொன்று காயவம் போருகங் கமடத்தி னுரோமம்.  (கஅ௩)

இலகு வத்தியின் மைந்தனே யிராக்கதர்ப் பாதி
புலனு ருதவிப் பொருள்களிற் பொய்மையே யென்றுங்
கலதி வாய்பறை யாககாக் கடிப்பறைத் தருணு
னலனு றப்புக ளியதிகண் மேற்கொடு நடத்தும்.  (கஅச)

வலிம னத்திலார் மாட்டுட லாதியை வருத்தி
யலைத லன்றியோர் பயனில வயனெறி யதாதி
சிலகு விற்பய னுறுநெறி யிந்நெறி யெனவர்
நிலையர் தம்மனச் செலவினுக் கிணங்கவே நிகழ்த்தும்.  (கஅ௫)

போத காரிய ராயுவ மாதிகள் பொருந்த
வோதி யாவையும் வசித்தவ ருவந்தன ரளிக்கு
மேத மார்பொருள் கொண்டுபோக் கியப்பொரு ளியாவுங்
காத லாற்கொளர் வித்தவை நுகர்ந்துளங் களித்தே.  (கஅ௬)

நிமை யொன்றிலாச் சிவனடி யார்களிச் சிறந்தோ
ராமெ னுவல சறிந்தவர் நடித்திடற் காகத்
தாம வீரகன் டிகைமுதல் வேடமுந் தாங்கித்
காம மாதியுட் சார்ந்தறத் தொழில்வெளிக் காட்டி.  (கஅ௭)

தாமுந் தம்புக ழம்பியே சார்ந்தவ ரெவரு
நாம வெம்பிர யத்தநூ றென்னெறி நயந்தே
சேம நீருல கத்திடைச் சிற்சிலர் திரிவார்
தோமு ளாரிவ ரூழ்வலி சொல்லுதற் கெளிதோ. (௧௮௮)

இனைய பாதகர் வஞ்சக மார்க்கமெய் யெனவே
கனவி லுங்கரு தாமலெம் மன்னைதான் காட்டும்
புனித மார்க்கநின் றலகுய்ய வீண் பது புகன்று
முனிவிர் காளுமை யாங்ஙன முயறவஞ் செய்தான். (௧௮௯)

ஆண்டு நூறுசென் றிடப்பிரி வாற்றொணு தவன்போ
லீண்டு மாதவங் காண்டா வெள்ளிவெற் பிகந்து
மாண்ட குங்கட மதிமகம் பருவம்பொன் னாரம்
பூண்ட நற்றினத் தறனிறை பிறைமுடிப் புனிதன். (௧௯௦)

வேதன் மேதகு மாதவ ராதிய விபுதர்
மாதபோதனர் நந்திமுன் னோர்குழீஇ வயங்கும்
பாத சேவையர் நாவையர் துதியினர் பரவிப்
போத மால்விடை யூர்ந்துமை திருமுனம் போந்தான். (௧௯௧)

போதல் காண்டலும் பொன்னெனப் புடவியி னெழுந்தா
னாத நப்பெரு வெள்ளமீர்த் திடமிதந் தமலன்
பாத மீதுறப் பலமுறை நிலமுறப் பணிந்தா
னேத கம்பக மழையுட னனைந்தன னிமலை. (௧௯௨)

உளத்தின் மிக்கெழு மன்பினப் பரனரு ளொருவா
வளத்தின் வாய்மைகள் வழுத்திய மனக்கொளீஇ வருதன்
களத்தின் விம்மலுந் தழுதழுத் தலுமுறக் கனற்கட்
குளத்தி லூனவாய் குழறிய துதிபல கூறி. (௧௯௩)

மறைபி னந்தமு மொருசிறி துணர்வுறா மாபி
னிறைவ நீயிவ ணெய்திய வெய்திய தென்கொ
னிறைகொ ணற்றவ மெனக்கெனப் புவிதொழ நிகழ்த்து
முறைபி னின்னன பற்பல வற்புரை மொழிந்தான். (௧௯௪)

அடியின் வீழ்ந்துமுன் வேண்டியாங் கம்பகக் குளிர்ப்ப
டடனை நாயக காட்டியிங் கருளென நயவா
நெடிது போற்றுபு நின்றன னத்துணை நிறைநீர்த்
தடமு ளேற்றிடு மனர்தனு தியாவட் சார்ந்தார். (௧௯௫)

சார்ந்த நாகர்க ளாங்கரன் றாளிணை மலர்க்கீழ்க்
கூர்ந்த வன்பொடு பணிந்தெழுந் திருகரங் குவியா
நேர்ந்து நின்றனர் துதிபல புகன்றனர் நிமல
னூர்ந்த தண்ணருள் வெள்ளத்துட் டிளைத்தன ராங்கே, (௧௯௬)

முன்னெ மூந்தரு ளண்ணலக் கௌரியுன் மோத
மன்ன வவ்வனத் தழகிய சிற்சபை மாடே
மின்னி லங்குபன் மாமணிப் பீடிகை மீது
தன்ன லஞ்சொலெ மன்னைகண் களிப்புற நின்றான். (௧௯௭)

மந்த காசமு காம்புய னாகியவ் வரத
னுந்து மற்புத வடிவுகொண் டருளிய வுன்னி
யிந்து கோடிநேர் மேனியீ ரைந்துதோள் வலத்த
மைந்த சூலமொண் மழுத்துடி சிலீமுகம் வாளும். (௧௯௮)

வாமம் வீசிய மலர்க்கரம் வன்னிநீள் பாசந்
தோமில் கேடகம் பிநாகமுஞ் சொற்றிரி சுபன்னங்
கோம ளந்தரு சுவன்னகங் கொக்கிற காந்தி
நாம மார்தரு மணிப்பணி விஞ்முது நதிமுன். (௧௯௯)

கலவு றப்பெறு செக்கர்வே ணியுமிரு காதின்
வலமும் வாமமுங் குண்டலந் தாடங்க வனப்பு
நிலவு பாற்கர நயனமு நெற்றிக்கண் முகிழ்ப்புங்
குலவு மாமணி கண்டமு மாரத்தின் கோப்பும். (௨௦௦)

மனுமுன் னூலுந்தோ லாடையு மறைச்சிலம் பார்ப்பு
நனியி லங்குருக் கொண்டுமை காண்கென நின்று
சினவு மாமுய லகன்புறம் வலப்பதஞ் சேர்த்தி
யனக னுங்குறு மனந்தனை யணியுற வழைத்தே. (௨௦௧)

பாங்கு மாமணி ராசி*வி ராசித படமேற்
றாங்கு மாறுவா மாங்கிரி குஞ்சிதந் தரித்துத்
தேங்கு வாமசா னுவினிற்காக் கோடனைச் சேர்த்தவ்
வோங்கு மங்கிரி வாசுகி தனையுறப் பிணித்தே. (௨௦௨)

எனை மாப்பணி யாவையு மேனைய வுறுப்பிற்
கான மாப்பணி யாவணிக் தாடக யேருத்

* விராசிதம் - விளக்கம்.

தான மாவதில் வனத்தெனை வுரைத்திடத் தயங்கு
ஞான மாசபை காப்பணின் றருளின ஞதன். (௯0௨)

வேறு.

இந்துவின் காந்த பருப்பத மாக வெம்பிரா னிற்றுரு வால்
கந்தர நீர்பெய் கந்தர மாகக் கவின்சடை நடித்ததாத் துடிக்கண்
வந்தெழு மோசை மணிமுகின் முழக்கா மலர்விழி பொழியருண் மழையாப்
பைந்தொடி யுமையா மோடதி குளிர்ப்பப் பவனமுற் றுயிரெலாந் தளிர்ப்ப

கொன்றையங் கானி விருண்மலக் கிளைகள் குமைத்துயர் சிவானந்த போக
கன்றருந் துறகோன் பியற்றுமா தவரா முழவர்க ளயந்தஃ தருந்த
வென்றமெவண் மதிமண் டலங்கர் தான மெண்கண னிருகாம் பிடிக்க
நின்றுமால் குணில்கொண் டிர்முழவடிக்க நிரம்பிசை காமகழ் படிக்க. ()

ஐம்முக முரச மருணந்தி முழக்கத் துருவக மட்டைரு பகமே
விம்மிசை யடமே நந்திரி புடைசம் பையென விசைமறை விளம்பும்
கொம்மைநற்குள மேழுமவ் வலையிற குலவுறக் கெளரிதாண் டவத்தை
நம்மையா ளுடையா னம்மையுன் னுவந்து நயனங்கள் களிப்புற நடித்தான் ()

களியுமை நயன வளிகளாந் காட கப்பத கமலநன் மதுவை
யளியொலி யதன்கட் சிலம்பொலி யாகவருந்துபு களிக்கட லழுந்தக்
கிளர்மணி ராசி விராசித வாமாங் கிரிமுடி தரித்தா விறையு
னளிமிக வேணி யொளியுவ ணையிற்போ யன்னதைக் கதிருல காக்க. ()

நீற்றொளி யினங்கீ ழிந்துமண் டலத்தா னிற்றலென் கொல்லென நிலவ
வீற்றுற மீளாங் காங்களென் டிசையு மேவுற வுமைதிரு வுளத்தை
யேற்றுகட் கருணை நோக்கினு னிரப்பி யெழின்மிகு மினையதாண் டவம்பல்
வேற்றுமை திகழ நடித்தல்கண் டரிமுன் விண்ணவர் முனிவரர் தொழுதார்.

சனகர்முன் னல்வர் துதிபல தொடுப்பத் தருமிரு வேதிசை மடுப்ப
வனகபா ரிடர்சூழ்ந் தாவொலி யெடுப்ப வரம்பையர் மணிவிளக் கடுப்ப
வனமலர்க் காத்தின் மல்லொளி கடுப்ப வானவர் மலர்மழை யுடுப்பக்
கனகதுந் துபியக் தாத்திசை படுப்பக் கண்ணுதல் புரிநடங் கண்டார். ()

சலதாங் கண்ட சாதகம் போலத் தபனனைக் கண்டதா மரைபோ
னிலமதி கண்ட சகோரம்போ லுவகை நிமிர்தா நெஞ்சமெக் குருகித்
தலைவநின் னடங்கண் டியான்புரி தவந்தான் சபலமா யினனி யென்று
வலமிலா னந்த வெள்ளமுன் னமையா தாங்கெதி ரெடுத்தலே போல. (௯௪)

அரியகற் சிவாதி காமினி சிவாதி சுந்தரி யம்பிகை கௌரி
யுமைபிர சன்ன சோமன வதனும் புயத்தின னாகியுள் ளுவந்து
வரசிவ கிருத சனனமா வுததி லங்கன மங்கள சொரூப
பரமகல் யாண மங்களப் *பிரத மாநடம் பார்த்திவை துதிப்பாள். (உ௧௩)

வேறு.

ஓதும் பவாதி யட்டகப்பே ரொடுசேர் தராதி யெட்டுருவன்
காதும் பவாம்பு தியின்முழுகிக் கலங்குமு லகுக்கா தாரன்
நாதன் பவனே சிவன்கோடி ரவிசங் காச மேனியன்சொல்
வேதன் பவாய புவிமூர்த்தி விமல பரம சிவாயநம. (உ௧௪)

விறல்கொண் மகாச லாதியவாய் விளைசா ருவசா காமூர்த்தி
யிறைகொள் சீத ளாம்புவரு டத்தா லிமையோர் நார்மிருகம்
பிறவை முதல தரு மூதல பயிர்முன் னிருபா லுயிர்புரப்போன்
மூறைமை புரிசர் வாயவம்பு மூர்த்தி பரம சிவாயநம. (உ௧௫)

பகர்மா சண்ட வெங்கிரண பங்தி களினுற் சகம்விளக்குந்
தகையோன் ககன சரகிரக தாரா தாமன் கபாலகர
னிகமார் போக மோக்கமரு ளிறைய னனவாக் கருணைநிதி
தொகுமீ சான ரவிமூர்த்தி தூய பரம சிவாயநம. (உ௧௬)

வலமார் வலாரிக் ககல்சுவர்க்க மருவ வருள்வோன் வேள்வியர்க்கப்
பல*தா யகனு பத்தெவர்க்கும் பாற்றி ள்வேயருான் பசுபதிப்பேர்
கலனு லமைந்த சருவான்ம நாத னமலன் பசுபதியாம்
புலமார் யமான மூர்த்தியருள் பொழியும் பரம சிவாயநம. (உ௧௭)

உரமார் சண்ட மாருதத்தா லுலக முழுதோம் பாதாரன்
சரமார் பலபே தானிலத்தாற் சருவான் மாக்க டமில்வசிப்போன்
வரமார் தருமுக் கிரப்பெயரால் வன்னி சகனு யமர்ந்தருள்வோன்
மூரணு ருக்கி ராயவனி மூர்த்தி பரம சிவாயநம. (உ௧௮)

இயங்கு கடோர வன்னிரவி யிந்து விலோச னத்திரையன்
றயங்கு பாலாம் பகமதனுற் சம்ப ராரி புரந்தகிப்போன்
பயங்கொள் கடோர வுருத்திரநற் படிவாற் பவஞ்ச முற்றொழிப்போன்
மூயங்கு முருத்தி ராயவன்னி மூர்த்தி பரம சிவாயநம. (உ௧௯)

இரவி கிரக முதலமா ரிணமா லிகையன் றனதொளியில்
விரவு சிருட்டி யுறவெளியாய் விரியு மண்ட ரூபங்கண்
மருவு முதனுப் பண்ணிறுதி மருவாப் பெருமைத் திருவுருவன்
வருபீ மாய நபமூர்த்தி வாத பரம சிவாயநம. (உ௨௦)

*பிரதம்-கொடுப்பது. * தாயகன் - கொடுப்பவன்.

சகல பயிரு மாவமுத கலையால் விருத்தி தாப்புரிவோ
னகில வுலகுங் ககனசா தேசா வொளிசெய் தருண்முதல்வன்
றிகழு மிதழி சானவிகட் செவிமுன் னமர்சங் திரமௌலி
தகைமை மகதே விதுமூர்த்தி தரும பரம சிவாயநம. (உகக

வேறு.

பரவுசங் கானே யொப்புயர் விகந்தோன் பாரற்பான் றனக்கிவை பணிவென்
றுரிமையிற் கௌரி யகிலலோ கத்தி னுயிரொலாந் துயர்தரு மலநோ
யரியவீ தோதி யகற்றுற நினைந்தே யடிக்கடி யிறைஞ்சின டுதித்தாள்
வருபசுங் குழவிக் குறும்பிணி நீக்க மருந்துதா யருந்துமா போல. (உஉ0

இவ்வியற் றுதிசெ யுமைமுகாம் புயத்தை யென்றுமன் விகசித மியற்றுஞ்
செவ்விய ஞானு னந்தசா கரத்திற் றிகழ்ந்தன வாதலின் றருளுந்
திவ்விய தேசோ மயசொரு பகமா தினகர னென்றுரை யாடு
நவ்வியங் காத்தோ னருண்மிக நோக்கி நங்கைகே ளென்றிது நவில்வான். ()

உலகெலாந் தழைப்ப நீநினைந் துமையீண் டுரைத்திடு மிருதுவி யாதிப்
பலர்புக ழுட்ட மூர்த்திக ளுடனுய்ப் பவாதிமங் கிரங்களோ டியைந்தே
யிலகியோ துநர்கட் கிட்டகா மியங்கள் யாவையு மீவதா யெமக்கீண்
டலகிலா னந்த மளிப்பதா யமைந்த வருந்துதி கேட்டின மகிழ்ந்தேம்(உஉஉ

நீயுனம் விழைந்த வரமெவை யுரைத்தி நேரிழா யெனவுல கருளு
நாயகி மகிழ்ந்தெம் பெருமவீண் டுன்ன நயப்புற நின்னையான் றுதித்த
மாயிருந் துதியைப் பாதகம் பலவு மருவிய பதிதரே யெனினு
நேயமிக் குரைப்பி னவையெலா மொருங்கே நீங்கிமா புனிதரா யிடுக.

பின்னல கிலவாம் பல்பொருட் பெருக்கும் பெறற்கரு நன்மகப் பேறு
முன்னுற யாவும் பெற்றுவாழ்ந் திம்பர் முகுந்தனு தியர்க்குமெட் டாத
நின்னடி நிழலிற் பின்னுற மருவி நித்தியா னந்தராய் வாழ்க
வென்னவ நீயித் தலத்திலென் னுேடு மிடையறு திருக்கவென் ருண்றும்.

தின்புரி சடையி னின்றுமுன் னழுவி நிரம்புசா னவிநதி யொருவா
தென்பெயர் வாவி தனிலன வரத மிகபர மோக்கதா யகமாய்த்
துன்புறு சகல பாவமோ சனஞ்செய் தூயதா யமர்கவென் றமலை
யின்புற வுரைப்ப விறைவினு யுமைநீ யெண்ணியாங் காகென விசைத்தான்.

அறைதரு வியங்கோ ளிறுதிவாக் கியங்க ளாறுமை விஞவிய தவைகள்
விறல்விதி வினையு மாயுயிர்க் குறுதி விளைத்துளங் தெளித்திடற் கென்ப

நிறையுமா தவத்தி ருமைக்கரு ணிமல னிலத்தினிற் றிலகமென் றுரைக்குஞ்
செறியுமவ்வி தழிவனத்திலெஞ்ஞான் றுஞ்சிவையொடுஞ்சேர்ந்துவீற்றிருக்கும்
கண்ணுதற் சிவன்செய் திருநடங் கௌரி காமமுற் றினிதுகண் டமையா
லெண்ணுரர்க் கெவையு மருள்சிவ காம சுந்தரி யெனும்பெய ரெய்தவ்
வெண்ணகைக் கொடியத் தளியினீசான விசும்பில்வீற் றிருந்தருள் புரிவா
ளண்ணறன் னோடுங் கிரீடைசெய் தென்று மமர்ந்துவீற் றிருந்திட மாதோ

இறைபரு ணடனம் புரிந்தவத் தினத்தி னிலங்குகோ கிருதநீ பாதி
குறைவிலர்ச் சனைகள் சிதளி யாற்றுக் குளிர்தரு மகாவபி டேக
நிறைசுவை வருக்க நிவேதன வகைக ணிகேதனம் வலம்வரன் மறையோர்க்
கறுசுவை யுணக்கள் கூவிள மிதழி யாதியா லருச்சனை முதல. (உ௨அ)

புரிகுவர் விசேட தினங்களின் விசேட பூசனை பொருந்துமெய் யன்பாற்
றருநந ரீரதோற் சவமுறை மைபிற்செய் தகமைய ரதுதரி சிப்போர்
தருவிமெய் யடியார்க் கமுதருண் மாகே சுரர்கடம் பூசனை தொடங்கும்
பெரியரின் னவர்பல் போகமு நுகர்ந்தெம் பிரானடி மலர்நிழல் பெறுவார்.)

என் றுரைத் தருளு மலயமா முனிதா ளிறைஞ்சுபு முனிவர ரெந்தாய்
துன் றுசீர்க் கௌரி தாண்டவங் கேட்டேச் சூழ்வினை யொழிந்தனங் கமலை
யன் றரி பாலென் வினவினன் வீடையா தறைந்தன னிவ்வனத் தவள்செய்
நன்றியென் சிவன்பாற் பெறுவா மென்னை நயந்தருள் கெனமுனி நவிலும்.

## கௌரி தாண்டவச் சருக்கம்.

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் எகரு.

---

## இலக்குமிதாண்டவச்சருக்கம்.

திருத்தளி யமலன் வாமச் செல்விபேர் நடனு னந்த
மருத்தளி நுமது கேள்வி மடுத்தனங் கமலை மால்பாற்
கருத்தளி யுறவி னுயிக் கானினேற் றிருந்து கண்ட
வுருத்தனிர் நடன மேன்மை யுறுவர்கா னோது கிற்பாம் (க)

நீரசா கரத்தி னுப்பட் கிளர்மணித் தீவின் மேவுஞ்
சாருவ போக மீக்கூர் சுவேதமா புரத்திற் சாலத்
தேருறுப் பமைந்தி லங்கு சினகா மதனின் மிக்க
பாருறு முடிய னந்த பரியங்க மதனின் மேவி. (உ)

காண்டகு சிரத்திற் செம்பொற் கதிர்மணி முடியின் றேசம்
பூண்டகுண் டலமு மெல்லாப் புவனமுந் திகழ்செவ் வாயு

பூண்டசெங் கமலப் போதின் மலர்விழி வனப்புந் தோளிற்
சேண்டவழ் சுதிரை நக்குந் திகழுமங் கதத்தின் சீரும். (ரு)

வரதகல் லபய மாழி வாரண மமைந்த நான்கு
கரமுமா மறுவி னோடு கவுத்துவ மணிகொண் மார்பும்
விரவுறு சுவண வாச விளக்கமுங் கழல்க ளார்க்கு
மருவளா றறிய செந்தா மரையடித் துணையின் மாண்பும், (சு)

சிரதுதன் மார்பு முன்னுத் திருந்திய வங்க மெங்கு
மருவுமுத் தூள னந்தான் வயங்குபுண் டரங்கொ ணீற்றிற்
றிரைமறி கீர வாழி திருவுருப் போர்த்த லேய்க்கும்
பொருவிலா வெழிலு மீசன் விழிமணி புனைந்த பொற்பும். (எ)

கருமுகி லனையநீல மேனியுங் கவினுற் றோங்க
வரிவையர்க் கெடுத்துக் காட்டு முவமனு யமருஞ் செல்வத்
திருமகள் பொறையின் மிக்க நிலமக ளென்று செப்பு
மிருவரு மிருபான் மேவி யின்புற விருப்ப வேனோ; (அ)

எண்டகு விகங்க ராச னெண்டிசைக்காவ லோர்மற்
றண்டர்மா தவரெண் சித்தி யாதியோர் பணிந்து போற்ற
வண்டயின் மதுவார் செந்தா மரைமலர் விழிமு கிழ்த்துக்
கொண்டறி துயில மர்ந்தான் குவலய முண்ட கோமான். (௯)

அனந்தலி னெழுந்தம் மாயோன் சிரமிசை யங்கை கூப்பி
நினைந்துதென் முகத்தி ருந்து நிமலதன் பொருட்டிக் காணிற்
கனந்தரு கண்டன் செய்த தாண்டவங் கருத்துட் கொண்டு
வனந்திகழ் கண்ணீர் பாயப் பதுமவா சனனுப் மன்னி. (௰)

ஆனந்த *பரித னு†யா சேவத வடவி மேய
வானந்தங் கிந்து வேணி வாதனை வாம பாக
மேனந்தம் வினைக டீர்ப்பான் வீற்றிருந் தருளும் வான்மை
சானந்த முறழ்மி டற்றெங் கௌரியைச் சானித் தானுல். (௧௧)

அனந்தா மிவ்வா றன்னே னூர்வமிக் குளந்தி னெண்ணும்
கனந்தரு மலர்மென் கூந்தற் கயலிய னயன நல்கூர்
னைந்தில யரம்பை யூரு கனிர்குளிர் புரையுஞ்சானு
வனந்தரு முகிழக் கொங்கை மலையாச ளித்த நங்கை. (௧௦)

பூசனைத் தவத்தின் பேற்றுற் புதுமலரிதழிக் கானி
லீசனை கடனங் கண்டா னெண்ணியால் கன்பர் தேர்ந்து

* பரிதன் - நிறைந்தவன்.     † ஆசேவதம் - கொன்றை.

பாசனை புரிய கல்கப் பாவையே யான்மற் றியாறு
மாசனை யனைய மானுந் தோன்றிட மொன்றே யாமால். (கக)

பெட்டோன் வழிபட் டேத்தும் பிரியகா ரணியப் பூவை
தட்டகல் பிருகு பூமி தம்மொடு மந்நி ருத்தங்
கிட்டிமுன் காணப் பெற்றேன் கிளக்குமவ் வனத்திற் றனே
யிட்டமிக் கமர்கின் றேனு லயிசத்தோ டென்று மன்னே. (கஉ

அப்பரிச மர்கின் றேனுக் கந்நடந் தன்னின் மேலுந்
தப்பரு மார்வங் கூர்வ தென்றிவை தானே யெண்ணிச்
செப்புத லின்றி யானெய் சித்திர பாநுச் சேர்ந்த
தொப்பவுண் ணெகிழ்ந் திருந்தா னுவணகே துயர்த்த செம்மல். (கந)

வேறு

மன்னெகிழ்ந் துருகு மெய்லயிற் றிருவம் மாயவ னடிதொழு திறைஞ்சிக்
கனமுடைந் திரிய வந்தாத் தோட்டு காத்திர நேத்திர கமல
மன்னமர்ந் தெனோகன் மார்பகத் திருத்தி விரமருள் பரமகல் யாண
புனைதுள வலங்கற் கந்தமார் ]கந்த பூதர சீதர போற்றி. (கச)

வாரண நேமி கதைசரா சனம்வாண் மலர்க்கரத் தெடுத்தருள் வரத
வாரணம் பரவு மாதவ போத வங்கண பங்கய வதன
நாரண முகுந்த கேசவ பதும நாபபா ரணகவ நீத
பூரண முராரி வாரண சோகம் போக்கிய பாக்கிய போற்றி. (கரு)

குலமறை கவர்ந்து சலதியின் மறைந்த கொடியனைத் தடியமீனுய்த்தன்
செலுவினுட் கடனீர் முழுதலைத் துடனத் தெம்மடித் தம்மறை மீட்டு
மலரய னிடத்து நிலையுறக் கொடுத்த மாதவ யாதவ வரத
புலனெறி நீத்த நிலையின ரேத்து புராதன சுராதிப போற்றி. (கசு)

ஆதர நினைந்தாங் காதரம் பெருக வாதரன் கடைவுற வருணாற்
பூதரக் தனைக்கைப் பூதர மலரும் புவிநிழற் கவிகையாப் பொறுத்தே
காதர மோட்டிக் காதர நீட்டிக் களிப்புறத் துளிப்பெயல் கடிந்தோய்
போதரச் சுரர்முன் போதர விறைஞ்சும் புண்ணிய கண்ணிய போற்றி. (கஎ)

என்றுரைத் திறைநீ யஞ்சலி புரிந்த தென்னிவ னுளங்கொண்ட தென்னை
யொன்றுமூ வுலகுக் கதிபனீ வணங்கு முயர்பொருள் யாதஃ துணக்குந்
துன்றுவா னவர்க்கு மூலகா ரணமாய்த் துலங்குறு மதனியல் சூழின்[த்தான்
மன்றவிம் மிதமா மென்றனக் கதன்சீர் வகையெலாந்தெரித்தி யென் றுரை

]கந்தம் - தோள்.

பிரமா மூரல முகையவிழ் கமலப் பெற்றியிற் பொற்றிரு மகடன்
வரிவிழி நோக்க மருவுற வாய்ந்து மந்தகா சத்தொடு வயங்குந்
திருமுக மலர்ந்து கருமுகி லனையான் றேங்கமழ் பூங்கடுக் கையங்கா [ம்
னரிதுமுன் னிகழ்ந்த சரிதமின் குரைத்து மணியிழாய் கேட்டியென் றறைய
புகலுமுத் தொழிற்கு மூவர்க்கு மூன்னோன் புந்திமுன் மூன்றுமுக் குணமும்
பகுதியுங் கடந்தோ னுளனொரு புருடன் பாரற்பா தரனவ னவனே
நிகரின்மெய்ப் பரதத் தவபர சிவன்மன் னித்திய னவனில்யா முதித்தேஞ்
சகளமா முருவிற் றனதரு ளாகுஞ் சத்தியை யிடத்தினிற் றரித்தான். (௨௦)
அனையளவ் விதழி யடவிமுன் னடுத்தா ளாங்கனை மருச்சனை புரிந்தாள்
கனையிருண் மிடற்றெங்கண் ணுதற்பெருமான் காட்சிநேர்பெற் றனள்கதிர்கால்
டனிவரை யுயிர்த்த பான்மொழித் தொடிக்கைப் பவளவாயுமையவட் பார்த்தட்
புனிதனுன் னுவகை நனியுற வருளிப் பூவைகேளீதெனப் புகலும் (௨௧)
பொன்னலர் கடுக்கை நமக்கதி காதல் புரிதலி னதனையிப் புவியின்
மன்னுறக் கிருத மாலையென் பெயரான் மலிவுற மலர்மகன் படைக்கு
மன்னகற் றருவை யவர்செறிக் கிலக உடைக்குகாண் பவனெவ னவன்றான்
றன்னுறு சனன பாவமுற் றொழிக்குஞ் சாதமீதென் றுரை தந்தான். (௨௨).
அளிமூரல் கமலத் தணங்குகே ளுமைசெ யருச்சனைப் பயத்தினு லவட்கு
களிர்மதி முடியோன் காட்டிய நடன நாகர்பூ மகன்சன காதி
தெளிவுறு முனிவர் பிருகுவா னருக்கர் திங்கண்முன் னிமையவ ரோடுங்
களிமிகு மவனி யாரொடுங் கண்டேன் கண்களாற் பெறுபயன் கொண்டேன்
அந்திலெம் பெருமான் பைங்தொடி யுமைகேட் டருள்வர மாங்கனை மளித்தாங்
கிந்திரை யென்பாற் பிறக்கெலா மரிய வின்னருட் சிறப்பு நோக்கருளி
முந்துமச் சபையின னந்தலை யெனக்கூய் முகுந்தநீ யுகந்தகம் பூசை
சந்தத மியற்றி நந்தம தருகு தங்குகென் றங்கரு டந்தான். (௨௩)
மன்றலங் கூந்தல் வரிவிழி மலர்க்கை மணிமூலை மதிநுதால் கேட்டி
யன்றொர்கா லிரணி யாக்கனென் றொருவ னசலமே யனையகாத் திரத்தன்,
வன்றிற லவுணன் வகிர்மதி புரையும் வக்கிர *தமிட்டிர னுளங்
கன்றிய மனத்தன் கொடுந்தொழி லானே கைவிடாப்பொருளொனுங்கருத்தன்
அம்மற மிகுந்த வரக்கனேற் றடைந்த வருவர வலியினு லவனிக், கொம்மை
வெம் முலையைப் பாயலாச் சுருட்டிக் கொடுஞ்சுரை கடல்புகுந் தொளித்தான்
விம்மலுற் றயர்ந்தார் மண்ணவர் விண்ணோர் வேறொரு புகலிட மின்றி
யெம்மைவந் தடைந்தா ரிறைஞ்சின ரினைந்தா ரிதுபொழு தினமிக விரங்கி
மேலுயர் வரைக ளெவற்றினு முயர்ந்த மேருவி னெண்மடங் குயர்ந்து
வாலிய வீராம முட்கெறிக் திருகண் வழங்கிடும் வடவனல் கதுவீ

* தமிட்டிரம் - தந்தம்

பாலெலாந் தகிப்ப வெருத்தமேற் போகும் பற்களோ டிலங்கிடும் புதிய
கோலமாங் கோலங் கொண்டியா னண்டங் குலைந்திடக் குழறொலி பரப்பி,
அவுணனுண் டேகு மவ்வழி யேகி பாழியு மளறெழ வலைத்துக் (நேர்
குவவுமால் வரைக ளனைத்தையு முருட்டிக் கொண்டுசென் றிரணியாக் கனை
தவமனில் பெரும்போர் புரிந்துயிர் செகுத்தாங் கொதுங்கிய வசுந்தரை த
னைமீட், டவமகன் றிருப்ப வராமுடி நிறுவி யனந்தா மப்புவி மகளே. (உ அ)

அவளுடைத் தாதை பிருகுமா தவன்பா லரண்புகுத் தவுணனை யாவி
கவர்செருக் கறிவை மறைத்தலின் மான்று கதிர்வரு வாளவெற் புடைத்துப்
புவனியெண் டிசையு மலைத்தன னதனாற் புன்கணுற் றிமையவ ராதி [யி
யெவருமெஞ் ஞான்று மிடுக்கண்டீர்த் தருளு மெம்பிரான் கைலைசென் றெ

மணிமிடற் றிறைவன் றிருவடிக் கமலம் வணங்கியீ துரைப்பரெம் பெரும
துணிவிலா விரணி யாக்கனு லெமக்குச் சார்ந்தபே ரிடரினும் பெரிதாத்
தினியமா லேன மாகிநின் றலைக்குந் தீங்கிது தாங்கிலே மெந்தாய்
புணியணி முடியெம் பரமவித் துயரும் போற்றினை போற்றெனப் பகர்ந்தார்

ஆயிடை யமலன் சேயினை நோக்க வயிலுடைத் திருக்கரத் திளைய
சேயவன் கமலத் தூயசே வடிகள் சென்னியிற் றன்னிய விறைஞ்சி
நேயமிக் கெதிரே நிற்பனோர் நோக்கி நிமலன்மால் புரிதுயர் நீக்கி
மாயன்மற் றவன்கொள் செருக்கினைமாற்றிவருகநீமைந்தவென் றுரைத்தான்

தாதைதாண் மீட்டு மிறைஞ்சுபு குமரன் சடக்கென வெண்†களிற் றுருவின்
மேதகு செருக்கி னின்றவென் னருகு மேவலும் வெகுண்டியா னுருத்த
வாதிதன்சேயொடமர்த்தனனிளையோனயிற்படை தூண்டியென்செருக்கைக்
காதிவெள்ளெயிற்றைக்கவர்ந்துசென் றீசன்கழலடிதொழுதுமுன்வைத்தான்

கந்தரம் புரையுங் கந்தர னுங்குக் கடவுள ராதியோர்க் கருளி
நுந்தம்வாழ் பதியி னேகுதி ரென்று நொடித்தனன் விடுத்தயிற் காத்தெங்
கந்தனை மனமு கந்தருட் காத்தாற் கந்தமார் தரவினி தணைத்து
மைந்தநீ யீண்டுப் புரிசெயற் கிதய மகிழ்ந்தன மென்றுவாய் மலர்ந்தான், (

கூற்றுறழ் தடங்கட் குவவுமென் முலைப்பூங் குழற்பிறை நுதற்றுடி நுசுப்பி
கோற்றொடி கேண்மோ வனந்தா மெனது கோலத்தின் கோலத்தை நீக்கி
மேற்றிக ழவனி மாதைவேட் டுவப்பான் விரும்பியச் சுவன்னக விபினத்
தாற்றுபு தவஞ்சி தனியா னடிக்கீ ழருச்சனை புரிந்தவ னமர்ந்தேன் (கூச

இருநில மகளு மென்னைவேட் டுவப்பா னீசனைப் பூசனை புரிந்து
மருவின ளாங்கெம் மிருவருட் கோனு மதிமுடி திருவுள மகிழ்ந்தெம்

† களிறு - பன்றி.

மருகெழுந் தருளி நம் முனக் கருத்தில் காகெனப் பணித்தன ளங்ஙன்
பிருகுமா தவனு மண முறை யவனிப் பெய்வனை தனையெனக் களித்தான். ()

வதுவைகன் மாபின் வந்தவவ் வதுவை மணந்தியா னத்திருத் தலத்தின்
விதுவைமா முடியெஞ் சிதனி காதன் வீற்றிருந் தருடளி வடபான்
மதுவையுண் டளிகள் குழல்பயில் குழற்பூ மாதொடு மாதரந் தருசிற்
பொதுவைபொற் கமலச் சேவடிப் பூசை புரிந்திருக் கின்றன ளங்கே.(௩௯)

இவ்வகை யாங்க னமர்ந்திடு நாளில் விறைபவன் மறைநஞன் கலசோ
னெவ்வமின் முனிவ ரெவர்க்குமெட்டாத வியல்பின தாயதன் சொரூபத்
தவ்விய லனைத்து மெனக்குப தேசித் தருளின னவன்புரி கடமே.
மைவ்விழியென துவிழையுமென் றுரைத்தான் மாதவன் மலர்மகன் வழங்கும்

காதனே யெனைய ளுதரித் தவனி நங்கையோ டங்கெழி லுடன
மாதரக் காண்ட லெம்முறை யமைக வருளினி யென்னிடத் துளதே
னீதயை கூர்ந்தக் கடனம்யான் காணு நெறியினை யுரைத்தரு ளென்று
வோதலு முதுகேட் டுலகெலா முநித்த வந்தியா னுவட்கிவை யுரைக்கும். ()

அரியன வாகு மசாத்தியப் பொருளு மருந்தவஞ் சாத்திய மாக்கும்
வருணனற் குனு பிருகுவுக் குரைத்த வாறிது கேண்மலர் மானே
யுரியவத் தவமோர் மூன்றவை மனம்வாக் குடம்பினு லுஞற்றுவ வாகுந்
தெரிவுறு மிவைதா மிலௌகிகஞ் சிறந்த தெய்விக மெனவிரு திறமாம் ()

இருவகை விரிக்கிற் றெய்விக மூன்றி லௌகிக மூன்றென விசைப்ப
வரியலௌ கிகந்தான் *பரார்த்தநிட் காம §மனசூயை யாதிமா னதமு
மருவித வசனஞ் சத்திய மாதி வாசிக மும்முப வாசங்
கருதுறு தீர்த்த சேவை ‡தானுதி காயிக மும்மென மூன்றே. (௪0)

எய்தியா னுதி மனஞ்செபா தியவாக் கியாகமுற் காயமிம் மூன்றுந்,தெய்விக
மாமி லௌகிகஞ் செய்தே தெய்விகம் பின்செயன் முறையாந், துய்யலௌ
கிகத்தை யொழிந்துதெய் விகத்தைத் தொடங்கல்வே ரற்றிடு மரத்தின்,
பெய்கனிக் கிச்சை கொள்வது போலும் பின்னையீ துண்மையென் றுணர்தி

இப்பரி சுணர்ந்தா ரேவத வனத்தி லெய்திலௌ கிகதெய் விகமாந்
திப்பிய தவங்க ளிரண்டுநீ யன்பிற் செய்கெனச் செங்கண்மா லுரைப்ப
வப்பொலங் கமலை சம்புசா நித்தி யந்தரு மேதுவா மவைகான் [றும்.
தப்பிலா தியற்றும் விதியருள் கென்று தாழ்ந்துமுன் னிறைஞ்ச மால் சாற்

---

* பரார்த்த நிட்காமம் - பிறர்பொருளின் விருப்பமின்மை.

§ அனசூயை - பொறாமையின்மை.

‡ தானுதி - தானமுதலியன.

## வேறு.

வனசை கேண்மதி யிவ்விரு வகையுமெய் யன்பி
னனகன் வெள்ளியஞ் சைலத்தெம் மண்ணரு ணினைந்தே
யினிது செய்திடத் தக்கதா மித்தகு வாய்மை
தனைம றந்தவர் தாமவற் றுறுபயன் சாரார். (௪௩)

பவள மெல்லிதழ்ப் பான்மொழிப் பைந்தொடி கேட்டி
யிவை யிரண்டொருங் கியற்றென முராரிமுன் னிசைத்தாங்
கவிர்ச ரோருகத் தமர்ந்திடு மனையவ ளவண்போய்த்
தவமி யற்றுதற் கமைவுறு வேடமுஞ் சாற்றும். (௪௪)

அளிக ளுவவுறு மலர்க்குழல் வேணிய தாக்கி
யொளிகொள் பூந்துகி லாமர வுரியினை யுடுத்து
வளரு மன்பொடு தரிப்பவர் பசுத்துவ மாற்றித்
தெளிவு றுஞ்சிவத் துவஞ்செய்வெண் ணீற்றுமெய் திகழ. (௪௫)

நிறையுத் தூளன மேதிரி புண்டர நெறியே
மறைமுற் கூறுசா பாலத்தின் வயங்குமைந் தாறென்
றுறைம னுக்களா லணிந்துபின் சதவுருத் திரமந்
நெறியிற் கூறியப் பதந்தொறுந் தருப்பண நிகழ்த்தி. (௪௬)

பாத்தி யாசம னார்க்கிய மேகறும் படீரங்
கூர்த்த வக்கதை தூருவை கூவிள மிதழிச்
சீர்த்த மாமலர் முதலுப கரணங்கள் சேர்த்தி
யேத்து சத்தியோ சாதமா தியமனு வியம்பி. (௪௭)

ஆண்டு சேதளி நாதனை யருச்சனை யாற்றி
மாண்ட குண்டிலாக் கினிவளர்த் தமுதுநீ வார
மீண்டு பிப்பில மாதிய பொருள்களா னீற்றிற்
பூண்ட வாகம விதிமுறை யோமமும் புரிதி. (௪௮)

ஓது மன்பினர் வினைவெலா மொருங்கினி தருளு
மேத குந்திர லக்கெழுத் தினைவிரை மலர்மேன்
மாது நாசக மசலமா மாயைதன் பீசங்
கோதி லாதவின் பீசமுன் குலவமுன் சேர்த்தே. (௪௯)

மறைசொல் சம்புவைக் கிருட்டின பிங்கள வடிவி
னெறிம லர்க்குழ லுமையொரு பாகனு நினைந்தே
முறையி னாற்செபம் புரிகுதி முனிவருஞ் செக்கை
நிறைகொள் பொற்றொடிச் செவ்வாய்த் திருந்திழா யினைவீ. (௫௰)

யாமு ரைத்தவா றேர்ந்தினி தியற்றினீ நினையுங்
காமம் யாவையு முடிக்குவன் கண்ணுதற் கடவுள்
வாம மாதவ னென்றவண் மாதவ னிதழி
காம வல்லியின் வல்லைசெல் கென்றுரை நவின்றான். (இக)

வேறு.

என்றுமா லுரைத்த யாவையுங் கமலை யிருசெவி மடுத்துளத் துவகை
துன்றநே ரிறைஞ்சி விடைபெறீ இயிதழித் தொலைந்தபேர் முளரியிற் புலங்கள்
வென்றகோற் றமலன் புரிகடங் காண்பான் விரைதரு நிறையவா வுந்தச்
சென்றுசேர்ந் தனைய வனப்பிர திசைத் திகையிரு குரோசத்திற் றிகழும்.

அகலி காரை நகர்தனிற் சுயம்பு வாமருட் குறியினை யாம்பன்
முகவனைச் சண்ட சனைவிழி குளிர்ப்ப முன்னுறக் கண்டன ளுதமே
தகவுளத்தெழுமெய்யன்பினுடன்பூதலமுறப்பணிந்துமுன் றுதித்தாள்
விகசித வருண வம்பயப் பொகுட்டின் மேவிவீற் றிருந்தருள் விமலை.

காரையூர்த் தவன் றனிளவன் மார்பகத்தாள்காரையூ ரதனிலோர் தடந்தன்
பேரையூர் தரக்கண்டதனிடை மூழ்கிப் பிறைமுடிக்கறைமிடற்றிறைவ
னூரையூர் பதத்திற் சிவாகம விதியா லருச்சனை யன்பினுற் புரிந்தாள்
வாரையூர் முலைபா கனுக்கத னுற்சி வந்திய நாதப்பேர் வாய்ந்த. (இச)

உரைத்த நூல்விதியா லானடிப் பூசை யுஞற்றியக் கமலையாங் கிருப்ப
வரைத்தனுக் கோட்டிப் புரத்தெரி யூட்டு மந்தகா சந்தரும் வான்மா
விரைத்தமர் போதின் மாதிரு காதுக் கின்னமு தொழுக்குவ தென்ன
நிறைத்தவம்புதஞ்சு ழம்பரத்துடம்பினிலவுறுமொழியிவை னிகழ்த்தும்

சித்தகல் யாண மங்கள ரூப நிலவுற வுலைவிலா துளத்திற்
பத்திமை யோடுமையருச்சனைசெய்பவளவாய்ப்பதுமைநின் றனக்கீண்
டத்தரு பத்தி யென்றுமே லோங்க வகிலமும் பரவுறு மிதழிக்
கொத்தலர் விபினத் திமகரர் குலம்பல் கோடிசூழ்ந் தொளிர்வது போல.

முதிரருட் சயம்பி லிங்கமொன் றெமக்கு மூலமா யிலகுமத் தலனிற்
றிதலைவெம்முலைநீசென் றுசேர்ந்தவணச்சிவக்குறி தனையருச் சனைநூல்
விதிமுறை புரிதி யென்னலும் வணங்கி விரைந்தன ளவ்வன மேவிக்
கதிதரு வியனீர்ச் சித்ரநதி மேல்பாற் கவிழிணர்க் குரவமூ லத்து. (இஎ)

இந்திர ஞாதி யெண்மரு மூலக மெட்டினின் ஞங்கன மெய்திச்
சிந்திய வலிபின் பெற்றுவாழ் வுறுவான் றிருந்திய வருச்சனை புரிய
முந்துநல் வரங்க ளளித்தது மேதை முனிவ ரருக்கா தியர்செய்
தந்தபூ சனைகொண் டவரவர்க் குரிய தருவரம் பலவளித் ததுவும்.(௫அ)

ஆயதோர் சுயம்பு லிங்கமிக் கிலங்கி யணிமணிப் பிழம்பென வாங்கே
மேயவெண் டிசையுந் தனதொளிபரப்பி வீற்றிருந் தருள்வது கண்டாள்
சேயவா ரிசத்தி லிருந்துல களிக்குந் திருமக ளுருகுசென் றமர்ந்து
பாயவன் பொடுமெப் மாமனைப் பணிந்து பகர்சிவா கமவிதிப் படியே. ()

பூசனைக் குறியபொருளெலாந் தொகுத்தப் புராரிதன் றிருவடி மலர்க்கீழ்
மாசறு மினிய சபரியை புரிந்தாண் மனநெகிழ்ந் தரியன துதித்தா
ளூசறு கமலை யாங்குநின் றொருவா றகன்றுசீ தளிவட கரையிற்
றேசமிங் குறுநற் றவம்புரி கருத்தாற் சென்றுநின் றங்கிது செய்தாள்

கருபயித் தாங்கொன் றவனியிற் பதித்தாள்கார்முகந் தனையாங்குரித்துத்
தொகுபலகிளைகொண்டெழு தருவாகித்திலங்குமாபெய்தனன்வளர்த்தத்
தகையபூ ருகமே யுடசமாக் கொண்டு தான்புரி தவக்கிட ருறுது
வகைசெயக் கருதி மலர்ந்தசெவ் வனச மலர்வரு தலைவியீ தாற்றும். ()

கவிர்புரை யதரத் தனையவன் முகுந்தன் காத்தசெங் கரத்தசக் கரத்தை
யவனுற நினைத்தா ளஃதுணர்ந் தாழி யத்தடத் தான்றிசை மேல்பாற்
குவலைய நேமி தீர்த்தமென் றுரைப்பக் குளித்தெழுந் தலர்மகட்குறுகிப்
புவிதொழு மடிக்கீழிறைஞ்சிமுன் னிற்பப் பூவையத்திகிரியை நோக்கா

பரிதியைப் பழிக்கும் பரிதியிப் படிநாம் பயிறவ பாலனம் பரிக்கென்
றரிதவ ணிறுவி நோற்றமர் காலை யற்புத மொன்றவட் கண்டாள்
வருமதன் வரலா றுரைக்குவங் கேண்மின் மாதவத் தீரொரு சேனை
மருமலர் செறிசீ தளியுறு மீன்முன் வாயினுற் கவர்ந்துண வீழ்ந்து.(௬௩)

ஒய்யென மீனுன் றெடுத்துவிண் ணேக வுறுகய னழுவுற வுடன்வீழ்ந்
துய்யுநீ ருடல நனைவுறப் பெற்றவ் வுருவமே திவ்விய வுருவாச்
செய்யபொன் னிறமுநேத்திரமூன் றுந்திகழ்புலித்தோல்விளங்குடையுங்
கையயன லபய வச்சிர சூல கந்தர கந்தரக் கவினும். (௬௪)

பணியணி வேணி மதிநதி யாதி பலவுமுற் றிலகுறு மீச
னணியசா ரூபம் பெற்றவா னோக்கி யானைநீ யென்னைவப் புருட
னினையிலக்ஷ்மிதாய்கலத்தின்முக்காலக*மெய்திறனெய்தலினிசைப்பான்
மனமலர்த்திருவே மானவ தேய மன்னன்யான் மணிப்பிரகாசன்.(௬௫

* எய்தல்—அறிதல்.

தாரணியிற் றாணி குலத்தில்வந் தனைச் சபரியை முப்பொழு தாற்றி
யாசரி நீதி வழுவிலா தியற்றி யறநெறிப் பொருண்மிக வீட்டி
யுரியவெண் கவிகை நீழலி னுலக மொருங்குவாழ் வுறப்புரீஇ மதமாப்
புரவிதேர் பதாதி யளவில வாக்கிப் பொன்னரித் தவிசமர்ந் தனித்தேன்.

அளவிலாச் செல்வப் பெருக்கினாற் செருக்குற் றரித்தவி சமருமக்காலை
வளரொளிச் சடையும் புலியத ளுடையு மலர்க்கர கரகமும் வயங்க
விளையருந் தவஞ்செய் மிருகண்டு முனிவன் வெம்பசி பம்பமெய்வாடிக்
களையகற் றுணவு விழைந்துகண் பகலிற் கடிநக ரருகுவந் தடுத்தான்.

ஈசனே யாக வழிபடற் பால ரீசன்மெய் யடியரென் றெண்ணு
வாசகே ருளத்தா னின்றியு மிகழ்வக ரரும்பசி யுற்றடைந் தவரை
நேசமோ டுணைப்போம்பொழுதினுமமையார் நிறைவுறத்தாந்தனி யுண்பார்
நீசரின்னவர்நிரையினெஞ்ஞான் றுநிலைப்பரென் றறிந்துவைத்திருந்தும்.

போகனூழ் வலியா லவனடி பணிந்து போற்றிடா திருந்தன னதனைத்
தோகனூழ் சாபம் வல்லனே யாயுந் திருவளத் தடைத்திடா திருந்தா
னுகொடும் பதக னுயர்வான் றனிச்சார்க் தயின் றயின் வருந்துய ரறியா
தேசியம் முனிமுன்வருதலுமிருகண் டுனரியுகக் கொதித்தெனைநோக்கி

அரசகீழயாச னகலின் னுமலி யாயினுந் தலைபணித் தகன்றாங்
கொருவுறும்வாக்கியனமெனவெமர்நீத்தொழித்தனர்பழித்தவிச்செல்வம்
பெருமித வாழ்வென் றதனையே யிறுகப் பேணுபு நித்தியப் பொருளாக்
கருதினையனைய செருக்கினாற் பசித்துன் கடைத்தலை யனுகியசமையும்.

வழிபடல்புரியா தொருதனிப்புகுத் தூண்டுத்தெதிர்புகுந்தனை மடவோய்
பழியித னினீ பருந்துருக் கொண்டு பசிக்கன றகிப்பவெங் மகங்கு
முழலுபு திரிகென் றறவர்கோன் சபிப்ப வுளநடு நடுங்கியவ் வுரவோன்
கழலடிதனில்வீழ்ந்தெந்தையெம்பெருமானடியனேன்பிழைபெரிதேனும்

ஐயநின் கருணை யதனினும் பெரிதா லப்பிழை தன்னையுள் ளடக்கித்
துய்யவக் கருணை மேற்படன் முறையே சொல்வதி யாதினி நாயே
னுய்யுமாறருள்கென் றுடன்பலதுதித்தவ்வுறுவர்கோனடிக்கடந்தினைந்தே
னையுறேலரசவெழுகவென் றுரைத்தானையினேனதுவினுவெழுந்தேன்

அஞ்சலி கரமென் சிரமுறநின்றே னறவர்கோனெனதிரவ னெனைப்பார்த்
தெஞ்சலி லருளான் மன்னகேண் முன்னு னுழ்வலியசுரருஞ்சுரரும்
மிஞ்சபோர் புரிநாட்சுரருடைந் தகல்பால்வீரையின் முராரியையடைந்து
தஞ்செயலுரைத்தாங்கினைவுறவவையுள் ளொன்னலர்தமையெதிர்ந்தடர்த்தான்

---

க அ-இன்மைப்பொருட்டு.

அரியிகன் றசுரர் யாரையுந் துமிப்ப வஞ்சபு சிலருடைந் தோடி
மருவல ரிதழி வனத்திற்றங் குரவன் மந்திரி தந்தையாம் வாஞ்சால்
பிருகுவி னுடசத் தொளித்தன ரிருப்பப் பின்றொடர்ந் தூர்குறு மாலப்
பெருமுனி யாங்கன் முன்னரே புரத்திற் பிரிந்தமை தெரிந்துழைபுகுந்தான்

வேறு.

புகுதலு முனிவன் பன்னி புகலுற்றூர் தமைத்தம் மாவி
யுகும்டார் வரினு மோம்ப லுத்தமர் மரபென் றோதந்
தகுதியி னுறைத்து நின்று ளாதலிற் றகைய மாலை
யிகலின்முத் தொழின டாத்து மிறைவரு ளொருவ னுயும். (எ௫)

திதித் தொழி றனதே யாயு மூழ்வினைத் திறத்தி னானே
விதத்தசத் துவகு ணந்தன் றொழிற்கலா தியல்பிற் சாரா
விதத்தினே கடலி னுளுந் துயிலுதல் கரிய மேனி
வதத்தொழின் முதலி யற்கைத் தமகுண மருவ லானே. (எ௬)

அனையமா றகையு நாரி யறவர்கோன் சுப்பன்னி யொன்றோ
வினையறு சூலியாக விரங்குவ தறிந்து மந்தோ
கனலெழ வாழி யோச்சிக் கற்புடை யவளைக் கொன்றான்
பினைவுறு மசுரர்க் கொன்றான் பெயர்ந்துடன் விரைந்து சென்றான்.

அந்தின்மா லேய பின்ன ரருந்தவப் பிருகு வாங்கு
வந்தன னிகழ்ந்த தோரான் மனைவிதா னவர்கண் மாட்சி
சிந்தைவெந் துயரின் மூழ்கத் தெரிந்திட ருழந்திச் செய்கை
யெந்தவெம்பதக ரானி கழ்ந்ததென் றுளத்தி னெண்ணி. (எஅ)

மாலெனும் பெயரை வாய்ந்து மயக்கமே யியற்கையாக் கொண்
டாலுறும் வஞ்ச னேயிக் கொலைஞனென் றகந்துணிந்து
சாலும்வெங் கோப சாபந் தந்தன னனந்த யோனி
மேலன விலாப்பி றந்தை மேவிமா றுயர்க வென்னு. (எ௯)

அரிகரத் தமர்ந்த செங்கே ழரிகறை தோயு மாழி
விரிகறை யுறுக வென்னு விரிகறை மேலோன் கூறும்
பரிகா மிலாத சாபம் பரிகா வளையை மாலை
யெரிசுடத் தொடர்ந் தலைப்ப வெரிசுடர் மணிகொண் மார்பன். (அ௦)

கதிதரு காஞ்சி மாந கரத்தடைக் தமலன் றூளை
விதிமுறை கமந்து வந்த விளைவைவிண் ணப்பஞ் செய்து
துதிபல கூறி வேண்டத் துவரிதழ்க் கௌரி கொங்கை
பதிவுறக் குழைந்த மேனிப் பரமனங் கருளிக் கூறும். (அக)

சாபத்தை நினைந்தினைந்து தளர்வுறு முகுந்த கேட்டி
யாபத்தை யகற்றி யின்பே யருள்கொன்றை யடவிசேரிப்
பாபத்தைத் தணிவித் தன்பாற் படர்தரு படரைத் தீர்க்குஞ்
சோபத்தை யொழித்தி போதி யென்றனன் சுருதி நாதன். (அஉ)

அம்மொழி வினவி மாயோ னவ்வனத் தணித்தி னேகிச்
செம்மைசெ யீச னுசைச் சிவபுரத் தமலன் றன்னைக்
கைம்மலா தூவிப் பூசை காலங்க டோறுஞ் செய்தே
யிம்முறை வருட மொன்றாங் கியல்புற நோற்றி ருந்தான். (அ௩)

தவமுவந் தமல னுங்குச் சார்ந்தெதிர் சலசை கேள்வ
விவணடைந் தெம்மைப் பூசை யியற்றுதி யென்கொ லென்ன
வவனடியிறைஞ்சி மாயோன் விளைவெலா மடைய வோதி
யெவமுறு சாப மோசித் தெந்தையெற் புரத்தி யென்றான். (அச)

மாதவ னுரைப்ப வெம்மான் வருதிமா லெமக்கன் போரம்
மாதவப் பெரிய ரற்றால் வருந்துயர் புரிந்த வந்த
மாதவன் றன்னா லன்றி மாற்றொணா தெம்மா லென்று
மாதவ ழிதழி வேணி பிருகுவை மனஞ்செய் தானால். (அரு)

சிவபுரத் தமல னுன்னஞ் செய்தலு மனத்திற் போந்து
தவகிறை பிருகு வெம்மான் சாண்முடிக் கொண்டு தாழ்ந்து
பவனெதிர் துதிய னேகம் பாவியொன் றினுக்கும் பற்றா
வவலனேன் றனையு மிங்கோர் பொருளென வகத்துட் கொண்டோய்.

இந்திர னயன்மா லாதி யிமையவர் முனிவ ரேனோர்
புந்தியின் வழிபா டாற்றிப் போற்றபு சூழ்ந்து நிற்ப
வெந்தைநீ யாது மோரா வேழையாஞ் சிறிய னேனைச்
சிந்தைசெய் தருளிற் றென்கோ தெரித்தருள் பெரும வென்றான். அஎ

திறகவில் பிருகு மாற்றந் திருச்செவி மடுத்து முக்கட்
பிறைமுடிக் கறைமி டற்றெம் பிரானருள் பெருக நோக்கி
யறனிறை பொறை முன்னாய் வருந்தவத் தங்க மெல்லா
நிறைவுறு முனிவ கேட்டி நீளைதன் கேள்வ னின்பால். (அஅ)

ஆற்றிய தீமை யம்ம வறைவதன் றதுகு றித்துச்
சாற்றிய சாப மேற்கத் தக்கதே யெனினு நம்மைப்
போற்றிய தொழின்மேற் கொண்டோன் புரப்பவன் புன்கண் ணுற்றாற்
பாற்றிய வருளல் யாவர் பாலதெங் கடமை யன்றோ. (அகூ)

அன்றியு மிவண டைந்தே வருடமொன் றளவு நம்மைப்
பொன்றுறு வன்பி னோடு பூசிக்கு நியமம் பூண்டான்
நன்றுல களிப்பா னின்றே லகிலமு நலத்தி னீங்கி
வன்றுயர் பலவுட் பட்டு வருந்துறு மாத லாலே. (க0)

வேறு.

பவவினை புரிந்து வருந்துமால் சாபம் பாறுமோர் பரிசுரை யெனவப்
பவனருள் சிரமேற் கொடுமுனி யுரைக்கும் பங்கயக் கண்ணநீ யளவில்
பவமென லகன்றீ ரைந்துமட் டடைந்தப் பவங்களுட் டசரதன் மகவாம்
பவமதின் மனையை யிழந்துசின் ஞளிப் பாரினிற் கானிடைப் பயில்க.

சக்கர நீயா தவகுலத் துதிக்குஞ் சனனத்தோர் முகூர்த்தமா மளவு
மிக்கபேரொளிபோய்க்கறையுருவடைந்தவிளம்பியசாபமேற்றெழுகென்
றக்கட ஷண்மா முனிசெல வான்று ளரிபணிந் தமலனே யடியேன்
புக்குறைதருமப்பிறப்பிடைமயங்காப் போதமீந்தருள்கெனப்புகன்றான்.

திருமறு மார்பன் பணிந்துரை வாய்மை திருச்செவி மடுத்தா னருளு
மரிநின தொருபான் பிறப்பினு ளைந்தேயனுக்கிர கம்பெறற் கமைவ
வுரியநிக் கிரகம் பெறுவமற் றைந்து முவற்றினு மீற்றினி லருள்வோம்
பரிவுறேல் விழைந்தவாறுமெய்ஞ் ஞானம்பாலித்துன்பதம்புகவளித்தும்.

எனவர னுரைப்ப விறைஞ்சிமா லகன்று னிவ்வரி பூசனை செயலா
லனகவப் பதிபி னரிபுர மெனும்போத் தாயதப் புரத்தினீ யாச
முனமுறைத்தாங்குச் சேனமாயடைந்தம் முன்னவன் றன்னைமெய் யன்பாற்
றினமுமர்ச் சனையி ரைம்பஃ தாண்டு செய்தவ னினிதமர்ந் திருப்பாய்.

இன்னண மாங்க ணமர்ந்திடு காலை யிரும்பசி யுடற்றகொந் தொருநாண்
மன்னுபொன் னிதழிவனத்தினிற் றிருப்பேர் வாவியின் மீன்கவர்ந் துண்பான்
முன்னுபு பறந்தம் முயற்சியா லுடல மூழ்குறப் பெற்றதன் பயனு
மின்னையான் முனிந்து புகன்றவிச் சாப நீங்குறப் பெறுதி யான்மேலும்.

செப்பருஞ் சிவசா ரூபமும் பெறுதி சேறியென் றுரைத்தனன் றிருவே
யப்பெரு முனிவ னருளிய வாறே யடைந்தனன் பருந்துரு வதனைத்
தப்புறு தனைய வரிபுரஞ் சார்ந்து தாணுவை யருச்சனை காலுந்
துப்புற வியற்றி வழிபடீஇ யாங்கட் டேயகன் மனத்தொடு மமர்ந்தேல்

அப்பதிக் கிறையான்பணிந்தத னற்சேனேசனென் றொருபெயரடுத்தா
னுப்புராத் திருவே சார்ந்ததன் வண்மா யுயிருறல் புதித
லிப்பருந் துருவை யடுத்தயான் பசிநோ யீர்ப்பவந் திக்கயத்
றுப்புண வாகச் சலசரம் விழைந்து தோய்ந்தனன் வாய்ந்ததிப் படிவம்.

காழுயர் தவத்தோன் ரனையிகழ் பதகன் கயலுணக் கருதுமா கொலைஞ
ஞழிய நிரயக் குரியனே யாயு மரனருட் டிருவுரு வடைந்தே
னூழினும் வலிய யாவுள வேறென் றுறவரு மேனுமவ் வூழ்முன்
குழுபுதருந்தன்பயனையேயென நூல்சொற்றது வெளிப்படத்துணிந்தேன்

என்றுமா லகலத் தடத்தமர் சலகை யின்புற முன்புகன் றாங்கு
நின்றவா விமான மேலிவர்ந் தூரிய நிகரிலாச் சிவபுரம் புகுந்து
மன்றவாழ்ந் திருந்தா னணிப்பிர காச மன்னவ னின்னது வனசை
நன்றுணர்ந் தினைய தீர்த்தமே யாவு நல்குவ தட்டெனி லென்பாள். ()

சீதளி யதனுத் தாதடத் தணதன் றிசைக்கரு கடுத்தகீழ் பாலி
னுதாம் பெருக மாபினின் மூழ்கி யருக்கிய முதனிய மஞ்செய்
தேதமி லதன்பே ரிலக்குமி தீர்த்த மெனப்புகன் றியாமிய திசையிற்
போதுபு கௌரி பூசனைக் குவகை புரிகென ரீசன்முன் புகுந்தாள். ()

அன்புளஞ் செலுத்த வடுத்தன ளுலகி னருட்குறி யாவைக்கு மூல
மென்பதுதோற்றுந்திருவுருப்பொலிவுமிலங்கொளியினங்களெல்லாந்தன்
முன்பொடுங் குறசீ ளொளிப்பிழம் பாகு மூலமுங் கோலமுங் கண்டா
டன்பா மிழந்தாள் சிவவச மாகு டரையின்முன் வீழ்ந்தனள் சலசை.

பின்னொரு வாறுங் கெழுந்தனண் மீட்டும் பிரானடி முடியுறப்பெருக்கன்
பின்னனி போற்றிப் பன்னுமஃ றுதிக ளியம்பியங் கரிதக ன்றேகி
மன்னிசிற்சபையெம்பிரானைமுன்பணிந்துவந்துகாற்றிசையிலத்தளியுண்
முன்னருச் சனை—யான் புரிதரு மிலிங்க மூர்த்திதன் சேவடிபணிந்தாள்.

அனந்தர மனைய விலிங்கத்தின் வடபா லத்தளி யுள்ளினி தமர்ந்து
கனந்தரு குழலி புடவிமா துடனுய்க் கலந்துவீற் றிருந்தருண்முகுந்தன்
வனந்தரு கழற்கால் வணங்கினள் பிருகு மாதவற் கண்டுள மகிழ்ந்தாண்
முனந்தருமாயன்வாய்மையைநினைந்தம்முதல்வனதானையின்முயல்வாள்.

சீதளி யரனை மாதவன் முன்னாட் செப்பிய விருமுறை சிந்தித்
தோதுறும் விதிகள் யாவையுந் திகழ வுழுவலன் புளத்திடை நிகழ
மாதவ லரிய வுபகா ரங்கண் மலிவுற வீட்டுபு வாய்மைப்
போதமொ டரிய நான்முறை காடிப்பூசனை புரிந்தன ளனும். (௧௦௪)

நாடொறும் பூசை புரிந்தனள் தாந்தன் னுதனுண் மைத்தவா நயந்து
பீடுற திருவைந் தெழுத்தையு முளத்தாற் பேணுநற் செபம்புரிந் தீற்றி
லாய்வுற சிவாங்கி வ்திவழி யியற்றி யாண்டுமுந் தூறுகோற் றமர்ந்தா
டேடுமெம் பெருமா னுவந்துபங் குனியுத் திரம்புகர் வாரமுஞ் சேர்ந்து.

---

ஐயான்என் றது அகஸ்தியமுனிவர்.

கற்றினத் திடப் மீதுமை யோடு நான்முக னாதிவா னவரான்
புற்றிடு சனக னாதிவே தியர்யா ரோதிடு மிருவர்நற் கணங்கள் [யப்
சுற்றிட வெழுந்து தோன்றினன் கமலை தொழுதளத் தானந்தம் வினை
பெற்றுநன் மிடறு விம்மவன் புருவாய்ப் பிஞ்ஞகன் றுண்மலர் துதிப்
பான்.

வேறு.

வேத மலர்கா யத்திரியின் விளங்கு பொருணீ யேயென்ப
வீது தெளிய நின்னுமத் திடையே யிலகும் பற்கநம
போத னரிமே லாணுகப் புகலு நாம வியாசத்தா
லோது தொழின்மூன் றுனுற்றியுமே லுனுற்று தொளிரு மொருவநம.

மலரோன் முதற்கீ டாந்தமென வருதா பாசங் கமரூப
வுலகி லுபாதி பேதத்தா லுணரார்க் கனேக ரூபநம
நிலவும் வலிசேர் தத்துவத்தி னிறைநோக் குடையார்க் கேகநம
நலனுர் களரி நிருத்தநம நதியார் மதியார் மௌலிநம. (கூ0அ)

சுரர்க டுதிகொ ளரவநம துலங்கு முருத்தி ரேசநம
கரிய கால காலநம கவின்கொ ணீல கண்டநம
புரமுத் திறத்த வயிரிநம பொன்னுர் சைல வில்லிநம
வரிதன் னொருபா லழகநம வனல நுதற்க ணனகநம. கூ0கூ)

புருட பாவங் கடந்தமையாற் புகலவ் வியத்த னுகின்றாய்
புருட னுக்கொன் புத்தியினுற் பொருவி லேக னுகின்று
யிருமை பெறுநி பெண்மையினு லினைய னெனவோர் வரியநம
திரியம் பகமுக் குணதீத சீத வீச சிவாயநம. (கூகூ0)

என்று துதிக்குஞ் சலசைமுக மினிது நோக்கி யெம்பெருமான்
மன்றல் கமழு மலர்த்திருவே வருதி யுனது துதிமகிழ்ந்தே
மொன்று முணர்வி னமைப்பூசை யுஞற்றி னோற்ற தெதுகருதி
யுன்றன் வேட்கை யாதுரைத்தி யருள்வோ மென்று னுமைநாதன். ()

அந்தண் கமலத் தனிக்கோயி லரசி யதிகேட் டுவந்துரைப்பா
ளெந்தை யெமது பெருமானே யெமையா ளுமையாள் பொருட்டொருநீ
முந்து புரிந்த திருநடன முறையி னின்றெடன் பொருட்டினிது
வந்து புரிதி னியற்றுநயான் காண்பான் விழையு மனமென்றாள்(கூகூஉ)

கமலை யுரைத்த வதுவினவிக் கருணை பொழியுந் திருவதனத்
தமல னினைத்த வுடனவையு மன்பர்க் கருளு மதுதொழிலோன்
விமல மனத்த திருவிரும்பி வேண்ட வருளா தொழியுங்கொன்
மூமல மகற்றி யெமையளிக்கு மூனைவ னதுவே புரிகின்றான். (௧௧௩)

தெக்கி ணுபி முகத்தமர்வேற் செங்கைக் குமரன் றிருநந்தி
மிக்க போத னரியவனி விபுதர் குலங்க ளிருடிகுழா
நெக்குள் ளுருகு மனந்தன்முத ஞக ரெனையோர் நெருக்கமறை
யொக்க முழங்க வப்பான்முன் புகுற்று நடத்தி னும்புதிதாய். (௧௧௪)

ஓத வரிதா யுணர்வரிதா யுன்ன வரிதா மன்னடமே
காத முழங்க வியங்கள்பல நலத்த குாலின் விரழுளர்யாழ்க்
கீத முழங்க மிடற்றிசையுங் கிளர்ந்து முழங்க வொருநான்கு
வேத முழங்க வன்பர்துதி விம்மி முழங்க வெம்மிறைவன். (௧௧௫)

வேறு.

அருந்தவம் புரிந்த வனந்தன்மா முடிக்கோ ரணிகல னுயபொற் பதமும்
வருந்திறன் முயல கன்புறத் தூன்று மலருமீ ரைந்துசெங் காமுந்
திருந்தொளி முகமண் டலமும்புன் னகையுந் தேவசா லந்தெறு கூற்றுந்
திருந்தொளிர் நீல கண்டமுங் கண்டத் திலங்குபொற் கலங்களி னெழி
லும்.

கொன்றைசெஞ் சடையிற் சூழ்ந்தொளிர் வனப்புங் குலவிளம் பிறை
யொளிர் வனப்பும், பொங்கறனி மேரு வருவியின் மார்பிற் புரளுமுந்
நூலொளிர் வனப்பும், வென்றிவெண் ணீறு பரந்தசெம் பவள மேனியி
னொடுகொளி வனப்பும்,மன்றலங்குழல்வெற் பணைபா னோக்கி மகிழ்
வுறுங் கடைக்கணின வனப்பும். (௧௧௭)

இன்னன பலவு மெண்டிசை களினு மிலங்குறத் திருநடம் புரிந்தான்
முன்னர்நின் றிருகண் களிப்புறக் காணு முளரியங் கொடியுள முருகத்
தன்னிரு கரங்கள் சிரமிசைக் குவியத் தரையுறப் பலமுறை யிறைஞ்சித்
துன்னிரு கண்க ணீர்மழை பொழியத் தொழுதுநின் றிவ்வரம் வேண்
டும்.

தேவநா யகனே யுண்மபொருட் டன்றுட் செய்நட மென்பொருட் டிங்
ங்வுருங் காண வுமுற வியற்றி யென்குறை முடித்தனை யிதனுன்[நான்
முவுல கிறைஞ்ச விப்பெருந் தவத்தை முதலிலென் பெயர்கொளவருள
யுதுளும் பெருமை யமைதிரு மனுன் வடியனே னருச்சனை யாற்றும். ()

நினைதரு ளுருவாய் மூலமா யிலகி நிலையுறு மினையமா விலிங்கந்
தனையுநா னேற்றங் கமர்தடத் தினையுந் தமியனேன் பெயர்புனைந் தளவா
னினிதருள் புரிதி யிவையொழிந் துலகி னிலகுறு முயர்பொரு ளெவற்
[றும்
வினைதெறு பரம வென்பெயர் முதலின் மேவிய வருடியால் விமல. ()

அன்றியு மெந்தா யித்தட நாப்ப ணன்பொடுன் பூசனைத் தொழிலே
யென்றுநான் புரிந்தாங் கிருந்திடு மாறு மினிதருள் புரிகெனப் பணியத்
துன்றிய கருணை நோக்களித் தளிசூழ் சுரிகுழல் வரிவிழித் தொடிக்கை
மின்றரு நுசுப்பி னணங்குரைத் தாங்கு மேவுகென் றருளியவ் விமலன்.

கமலைகே ணின்ற லருச்சனை புரிந்து கருதியேத் திடப்பெறு நமைநீ
யமலமா கௌரி தாண்டவ மூர்த்தி யாகவே சந்தத நினைந்து
விமலையா யமர்தி யெமதுபொன் வேணி மேவுமா கங்கையா னிறைந்து
நிமலமுற் றுளதுங் கௌரியாற் பாசா னிருமிக்கப் பெற்றசித் தியதும்.

அரிவைநீ யெமையாங் கருச்சனை புரிந்தே யமர்வது மாயவத் தடத்திற்
புரிவொடு முழ்கி நமையும்வந் திறைஞ்சும் புண்ணிய னெவனவன் றனக்
குப்
பரிவினன் மோக்க மளிக்குது மென்னாப் பகர்ந்துமா சகிதனா யாங்கே
விரிமலர்த் தவிசிற் றெரியிழை பரவ வீற்றிருந் தருளினன் மாதோ. ()

பின்புமக் கமலை யான்புது நடனப் பெருந்திருக் கோலத்தின் பொலிவை
யென்புநெக் குருகக் கண்டுகொண் டுள்ளத் திடையறு வானந்தம் பெருக
வன்புரு வாகி நாத்தழு தழுப்ப வகத்தடங் காதெழுந் தாங்கு
முன்புநின் றரிய வாக்கிய வகையான் முன்னவன் றன்னையேத் தெடுப்
பாள்.

ஆதியு நடுவு மந்தமுங் கடந்தோ னனாதியன் சனாதனன் விசால
மேதகு பவஞ்ச ரூபகன் பரனவ் வியயனே விபுபல கோடி
யாதவர் மதிக ளங்கிகாந் தியனல் லடியவர் மனோரதம் யாவுந்
தீதற வருளு மருட்பெருங் கடலெனுஞ் சிதளி நாதனாமுன் போற்றி. ()

வரஞ்செறி யுலக சிருட்டிமுன் னாக வயங்குமுக் கிருத்தியம் புரிவோன்
விரிஞ்சன்மா தவனோ டுருத்திர வடிவன் வியத்தகு முக்குணா தீதன்
சுரஞ்சனா விசால பலபுரு டார்த்தந் தருதிப்பவர்க் கருளருட் டேய்மைத்
திரஞ்செயு முருவன் பாவனா தனனெனுஞ் சிதளி நாதனாமுன் போற்றி. ()

அனந்தவெம் பூத சங்கரா யகனல் லருணிதி சனந்தன னாதி
யனந்தமா யோக முனிகுல பூசி தாங்கிரி பங்கய னரஞ்சே
ரனந்தமா மகுட பூடண மாக வம்புயாங் கிரிதரித் தருள்வோன்
றினந்தொழு மனந்த நாமரூ பகனெஞ் சீதளி நாதன்றாள் போற்றி. ()

வெங்கதிர்த் தாணி யங்கிதன் சோம விலோசனத் திரையன்மின் புரையு
மங்கதிர் வேணிக் கங்கையிந் தணிந்தோ னரையினி லுரகசூத் திரன்றன்
பொங்குசார்த் தூல சருமவம் பரன்றாள் போற்றுநர்ப் புரக்குமங் கண்
[ணன்
றிங்களென் றென்றும் வலஞ்செலுஞ் சிகரச் சீதளிநாதன்றாள்போற்றி.

சுகந்தமா லதிமுன் னுமலர் வேதந் துதிகிரி சுபன்னமுன் னணிந்து
இகந்தமா மணங்கூர் சுசந்தன படீரந் திமிர்ந்தா தனந்தா ளாதி
யுகந்தபூ டணகந் தரத்தொடு மெளியேற் கோங்குமா சிற்சபா பதியாய்ச்
செகந்தனி வீடு பேறுற நடஞ்செய் சீதளி நாதன்றாள் போற்றி. (கஉகூ)

இன்னிசை மிருதங் காதிதா ளங்க ளியைந்தசங் கீதங்கள் யாவுந்
துன்னு*சா மியமாந் தாண்டவப் பிரியன் றுலங்குமா மறைச்சிலம் பாற்
பொன்னட வாமகுஞ்சித பாதன்புயங்கபூ டணனரி போதன் [றும்
சென்னிதாழ்ந் திருபாற் றுதிசெயுந் தலைமைச் சீதளி நாதன்றாள்
போற்றி. (கங௦)

உமைகாம் புயத்தா லுவந்துசெய் பூசைக் குளமகிழ் பவன்புவி முராரி
யமரர்கண் முனிவருலகபா லகர்க ளனந்தன்முன் னவர்தொழு மமல
னிமமலை யுதவு விமலைதன் னாத னேத்துநர் காமியப் பிரதன்
றிமினிமி ரிடப மூர்ந்தருள் பரமன் சீதளி நாதன்றாள்போற்றி. (கஙக)

புரந்தர னாதி யமரச மூக பூசித பாதவம் புயன்றாங்
கரந்தராம் பனலா னிலாம்பரோந் திரவி யான்மக வட்டமூர்த் தியன்பூ
வரந்தரு*பிருகு வருச்சனைக் குவந்தோன் வானரன் புராந்தகன் மறலி
திரந்தரு முரத்தி னேச்சுபங் கயனெஞ் சீதளி நாதன்றாள் போற்றி. ()

என்றுபன் மொழியாற் றோத்திரம் புரிந்தாங் கிலக்குமி யிதயமீ துவகை
துன்றுறக் களித்து கண்மழை பொழிந்து துணைக்கரஞ்சிரமிசைக்குவிந்து
நின்றிட வரனேந் திகழ்பரஞ் பரனை நிகழ்சபா நடனநா யகனை [ழிவான்
முன்றனி யிறைஞ்சி யெழுந்துநின் றுகிவு முதல்வனைப் பார்த்திது மொ

* சாமியம் - சமானத்துவம்.

அமரநா யகனே கிட்டுதற் கரிய வமலை பேர்த் தாண்டவ மளியேன்
றமமற விருகண் களிப்புறக் கண்டேன் சன்மசா பல்லிய முற்றேன்
பமரமா தூரிய மதுநகர்ந் திசைகள் பாடுமிச் சீதளி காப்பண்[ரைத்தான்
விமலநீ யுரைத்தாங் கென்று மிற் றெழுதே விழைந்தமர்ந் திடுவெலென்று

அம்மொழி வினைய வுமலனுங் கமலை யானன கோக்கியீ றறைவான்[டோ
செம்மலர்த் திருநீ புகன்றவித் துதியைச் சிந்தித்தோ ருரைத்தவர் கேட்
ரிம்மையி னினைத்த விட்டகா மியங்கள் யாவையும் பெற்றுவாழ்ந் தேனை
யம்மையின் மோக்க மடைகுவ ரைய மன்றிது திண்ணமென் றறைந்
தான். (கக௪)

இவ்வகை யருளு மீசவாக் கியங்க ளிலக்குமி வினையுள மகிழ்ந்தச்
செவ்விய விதழிக் கானன மொருவான் சீதளி காப்பண்வீற் றிருந்தா [த்
ளவ்வணி யிழைபூ சனைபுரிந் ததற்பின் னமலனைத் தலத்தையத் தடத்தை
திவ்விய நாமஞ் சீதளி நாதன் சீதலஞ் சீதளி யென்ப. (கக௫)

எத்தகு பொருளு மத்திரு முன்னு வியைந்தன சீதளி யென்னு
மத்தடத்தீசா னுைதா தடத்தி னவிர்தரு மருச்சுன விருக்கங் [ஞ்சார்
கொத்தல ரலங்கற் குழற்றிரு வென்றுங் குறித்தமர் வெறித்தவம் புய
நத்துல வனைய சீதளி யமோக னளினியென் பெயரையு நணுகும்.(கக௬)

பொன்மகள் காணப் புதுநடஞ்செயுமப் புராதன நகரிபின் புத்தூ[மீசன்
றென்னவும் யாண்டும் வழங்கிடப் பெற்ற தியார்க்குமுன் னவனெனு
பின்னரா மயன்மான் முதலினோ ரிறந்து மிறந்திடாப் பெற்றிய னுகி
மன்னிநின் றினமை புதியவ னுக வயங்குதல் போன்மென மாதோ. ()

வேறு.

[யோன்
செங்கமலத் திருக்கோயில் வீற்றிருக்குஞ் சேயிழையச் செங்கண் மா
றங்குதிருப் பாற்கடலின் முன்புநடந் தரிசித்த தகைமை யுள்ளத்
தங்கணுற வெழுந்திருகை சிரங்கூப்பு மஞ்சலிபார்த் தவன்பா லந்தத்
துங்கநெறி வினவியிரு வகைவிதிகேட் டுள்ளன்பு தூண்ட லாலே. ()

செவ்விதழி வனஞ்சார்ந்து பிருகுமுனி தனைக்கண்டு சிவனைப் பூசை
யெவ்வமற வுறப்புரிந்து கௌரிதாண் டவந்தரிசித் திறைஞ்சி யந்த
நவ்விமறி திகழங்கை நாதனருள் பெற்றுடனெஞ் ஞான்றுந் தூய
பௌவநிகர் சீதளியி னிடையிருப்ப வரம்பெற்றப் படியே வாழும். ()

திருத்தலமு மத்தலைய தீதளியு மாங்கருளே செய்தெம் முன்னந்
திருத்தமல னருளுருவா யமர்கூல வருட்குறியுந் திகழும் மூன்றுந்
திருத்தருபல் புராணமிதி காசமுதல் யாவுமுணர் சிந்தை யான்மு
திருத்தமர்சர் வோத்தமமென் றங்கையெடுத் தனவேந்திச் செப்புவாரால்

பவித்திரமாய்க் கமலைசெந்நாப் பவித்ததுதி யட்டகமப் பான்மை நாக
பவித்திரன்முன் றுதிப்போரப்பானருளாற்றிருநோக்காற்பல்குசெல்வம்
பவித்திரப்போர்க் களித்தினிய மகப்பேறுமுதற்பேறுபடைத்துமேலுற்
பவித்திரங்கு படர்சீத்துப் பரமசிவ பதநிழலிற் பயின்று வாழ்வார். (கசக)

என்றமல யத்தமரு மெந்தைகுறு முனியியம்ப வினிது கே
ளின்றமுனி வரசெந்தாய் தூயபரன் மாடனைந் தகடீர்ந் தின்ப
மொன்றநீ புகன்றனைகேட் டெடுத்த பயன்யாவு முற்றே மந்த
வென்றிவடு கேசனருட் காதையினி விளம்புகென விரிக்க லுற்றான்.

இலக்குமிதாண்டவச் சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - அசக.

---

## வைரவச் சருக்கம்.

---

சிந்தை யன்புறு மந்தணீ
ரிந்தி ரைக்கட மியம்பினு
முந்து சீர்வடு கன்கதை
புந்தி யாதரப் புகலுவாம்.

வேறு

முன்னொருகற் பாரம்பத் திரவி யிந்து முகிழ்க்குமுனம் புவிவான முழுது மூடித், தன்னுயிரு ளேபரம்பி மறைப்ப வானிற் சூழ்ந்துநிறை சுரர்கடமைத் தொலைவி வாற்றற், கொன்னுனவே லசுரர்குழா மடர்ப்ப வஞ்சிக் குலைகுலைந்தார் புவிகரரைக் குறுகி யாங்கே, வன்னிலைய வெம்பூத வேதா ளங்கள் வல்விடங்கள் பல்பிணிகள் வருத்த நொந்தார். (உ)

இன்னவகை பரிபவமுற் றொடுங்க விண்ணோ ரிருநிலத்தா ரொழிக் தோர்க ளெவரு மீற்றிற், றன்னியெழு மெழுகடலி னொலியே போலத் தளர்ந்தினர்வாய் விட்டரற்றித் தொல்லை வேதர், முன்னவிலுந் தாரகத் தை யமல னுக்கே மொழிந்திறக்கு முயிர்க்குரிய முத்தி நல்கும், பன்ன ரிய வுருத்திராதி பூதி யாய பைம்பொனெயிற் காசிநகர்ப் பாங்கு சேர்ந் தார். (ந)

வேறு.

அன்னரவி முத்தமெனு மப்பதியுற் றங்கே
மன்னுபல மாதவர்கு ழாத்தைமுன்வ ணங்கி
யின்னுயிர்க ளுய்யமறை வேள்விகளி யற்றித்
துன்னுநல னேயருளுந் தூயமுனி வீர்காள். (ரு)

என்றினைய நற்றுதியி யம்பினரி றைஞ்சி
யன்றியசு ராதிகள்செ யார்த்திமுழு தாங்கே
நின்றெதிர்மொ ழிந்தவைக ணீங்கும்வகை செய்வீ
ரின்றுநும தின்னருளின் யாங்களுய வென்றார். (சு)

ஆங்கவர்க ளிவ்வகைய யர்ந்தனரி சைப்பப்
பாங்கமரு மாமுனிவர் பற்பலவ ருள்ளே
தாங்குமளி யார்பிரக தாரணன வர்க்காந்
தீங்கறுமு பாயமிது வென்றுநனி தேர்ந்தே. (எ)

ஓவரிய தீவினைகள் யாவுமுட னோட்டித்
தாவரிய வின்புபொரு டாம்பலவு மீட்டி
மேவரிய வாழ்வருளு ருத்திரநல் வேள்வி
யாவதென வெண்ணியஃ தாற்றவுள மேற்றான். (அ)

எண்பிரக தாரணனென் றேத்துறுமத் தீர்த்தன்
விண்பரவு ருத்திரநல் வேள்விசெய வேண்டி
யொண்பொருள்க ளீட்டிமறை யோதுவிதி காட்டி
வண்பெயன னீட்டிவள ராகுதிகள் கூட்டி. (க)

ஆற்றிவர வேள்வியினை யாங்கதனி னுப்பட்
போற்றுபல கோடிரவி போன்றொளிரு மேனி
யேற்றறுகு ணப்பகவ னேத்துறவெ ழுந்தான்
கூற்றைநிகர் தானவர்கு லக்குலைக லங்க. (கூ)

வேறு.

செய்ய வேணியு முக்கண்ணுந் தாடங்கந் திகழுந்
துய்ய கன்னமும் புருவாண் னெரிப்பொடு துலங்குந்
தெய்வ வாண்முக மும்பகிர் மதியினைச் சிவனும்
வைய மஞ்சுறு வக்கிர தந்தமும் வயங்க. (கo)

காமி ரண்டினுங் தண்டமுங் கபாலமுங் கவினத்
தான மாலைசமஞ் சாமங் கதமுதற் றயங்கப்
பொருவின் மந்திர பூடண மெய்வயி லாகிப்
பரம யோகியாய் நின்றன னுண்டெழு பகவன். (௧௧)

நின்ற போதிமை யவர்முதல் யாருமந் நிமலன்
முன்ற வாதபே ரன்பினுன் முறைமுறை பணிந்து
துன்று கண்களா லருந்துக ராமெனத் துவன்றி
நன்று நோக்கியாங் குருத்திர மகத்திலங் கிறைவன். (௧௨)

தோன்று தன்மையாற் றமக்குறு மாபத்தைத் தொலைப்பா
னென்று நிற்றலா லியைபெய ருருத்திர னென்றுஞ்
சான்ற வாபதுத் தாரண னென்னவுஞ் சாற்றி
யான்ற துன்பற வையமீ சரனென வடைந்தார். (௧௩)

வேறு.

அடைந்து நின்றெமை யாளுடை யண்ணலே
படர்ந்த வேணிப் பகவ பராபர
தொடர்ந்த டர்த்திடு தீமை துமித்தரு
ளிடந்த ரற்கிவண் வந்தரு ளெந்தையே. (௧௪)

சேரு மாருயிர் மாசு சிதைத்தலுஞ்
சாரு மாசி வியற்கையுந் தற்குண
தியாரு மோர்ந்திட வேகொ ளெரிமகத்
தார வந்தனை யாபதுத் தாரண. (௧௫)

ஐய னேயர சேயமு தேயருண்
மெய்ய னேயொளிர் வெண்மதி வேணிய
துய்ய னேயடி யார்க்கருள் சோதியே
குய்ய னேயன வாவருட் குன்றமே. (௧௬)

தேவ தேவ திகழ்வடு கேசனே
காவ லான பிரம கபாலனே
பாவ லோர்துதி பண்ணவ வுன்னையே
லேவ தாயிடர் தீர்த்திடென் றேத்தினார். (௧௭)

---

* மஞ்சீரம் - நூபுரம்.

இன்ன வாறுமின் தேத்தி யிரங்கிய
வன்னர் பாலக ராதிக ளானனி
தன்னு பேரிடர் தேய்ந்தமை தேர்ந்தவு
னுன்னு மாரரு ளாலொன் றுரைத்துவான். (கஅ)

அன்ன வூர்திய ருய வலர்மிசை
மன்னு நான்முகற் கூவி வரக்கிகழ்
பன்ன ரும்மொளி யார்மதி பானுவை
யின்ன நீரவுண் டாக்கென் றியம்பினன். (கக)

ஓது மாற்ற முணர்ந்தனன் மாமதி
யாத வன்றனை யம்முறை யாக்கினன்
வேத னேக விராட புரியினிற்
போத வுன்னியப் புன்னியன் போந்தனன். (உ0)

வேறு.

பார்திடு மமல னுக்குப் பொருவிலா வசுர ராதி
யார்துயர் புரிவார் தம்மை யாவத்தா லழிப்ப வெண்ணி
ஈர்தரு மனைய வார்ப்பி னலிருவர் கால மொன்றின்
மாய்ந்திட வுலக மெல்லாம் வந்ததோ வொலியீ தென்று. (உக)

கம்புக லடைக்தோ ரென்ன வெண்ணுபு வடுக னாதன்
றன்பெரு மாயை தன்னாற் றனித்தனி யனைய மாந்த
ரும்பர்தஞ் செவித்து வார மொருகண மடைத்து வைத்திட்
டெம்பிரா னுகாந்த வார்ப்பே யென்னநின் றொலித்தான் மன்னோ. உஉ

வீறுமா புருடார்த் தங்க ளளித்தருள் விமலன் றன்னைக்
கூறுமா வுருத்தி ரப்பேர்க் குழகனை விநாசன் றன்னைப்
பாறுசூழ் சூல கால பைரவன் றன்னை முன்னர்த்
தேறுவா னவர்கண் மாந்தர்க் கிடர்புரிக் தாரிற் சில்லோர். (உ௩)

தமதுபே ராற்றல் குன்றிச் சாணடைந் தார்கள் சில்லோர்
குமலியி னுருவு தாங்கி நண்ணின ராங்குச் சில்லோ
ரமைவுறு மறிவு நீங்கி மூர்ச்சித ராஞர் சில்லோர்
சமர்கா மிகளா யெம்மான் றன்னெதிர் சார வந்தார். (உ௪)

அனையர்க ளெவரு மஞ்சி யழிதரக் கொன்று சூலந்
தனிலுடல் கோத்து விண்ணிற் றூங்குபு கர கபாலத்
தினிலவ ருடலிற் பெய்யுங் குருதிமுற் றேந்தி யுண்டா
னனியொளிர் களமே யன்ன குருதியா னனைந்த தம்மா. (உ௬)

அன்னவெங் குருதிச் செம்மை யக்களந் தன்னின் முன்னர்த்
துன்னிய காள நீலத் தொடுமணி யாகித் தோன்ற
மன்னிநின் றங்கெம் பெம்மான் மறைகளே ஞமலி யாகித்
தன்னைவெங் சுமக்கு மாறு சமைத்தனன் கொண்டு பின்னர். (உ௬)

அணியகிங் கரர்க ளாக வடைந்துள பூத நாதர்
திணியபல் வேதா ளங்கள் தேவர்மா னுடர்க ளாதி
பணிகுநர் காண நின்று பயினடஞ் செய்தாங் கச்சம்
புணருமா ரவம் புரிந்தான் பொங்கருள் வடுகநாதன். (உஎ)

வேறு.

மிக்குறு* பீ தரு§ ரவத்தைப் புரிதலினு லாங்கவற்கு விளம்பு நாமந்
தக்கபை ரவனென்ன வமரரெலா மகிழ்ந்தினிது சாற்றி னார்பின்
செக்கமலத் திருக்கரத்திற் றிகழ்தண்ட மேந்திவரு சிறப்பி னாலே
யக்கடவு ளனக்குரிய பெயர்தண்ட பாணியென வறைந்தார் மன்னோ. ()

வாயில்செலா யோகியென வருதலினால் யோகியென வழுத்தி னார்கண்
மேயமல ரயன்றனைக்கூய்ச் சுடர்களையுண் டாக்குகென விதித்த லாலே
தூயமுனி வோரவனைப் பிரமேச னெனும்பெயராற் றுதித்து வாழ்ந்தார்
பாயபலப் பலபூத வேதாள மாதிகண்முன் பரவிச் சூழ்ந்தே. (உக)

நயந்துரிய பணிபுரித லாற்பூத நாதனென நவின்றார் முன்னு
வியைந்தமகத் தனிற்பால ரூபகனாய் வந்தருளு மியல்பு நோக்கி [காங்கு
யுயர்ந்தபெயர் வடுகனென வுரைத்தனரெத் தலத்தினிலு முறைந்தாங்
வியக்துசெய்பா லனத்தாற்கேத் திரபால னென்றியற்பேர் விளம்பி னு
ரால். (௩0)

இத்தகைய னிவர்திருப்பேர் புகன்றுதுதித் திடவாங்க ணிலங்கி நின்ற
மெய்த்தகுருத் திரகால வைரவனவ் விடைநின்றும் விழைவி னோடு
முத்தமமாந் திருச்சைலத் தாழ்வரையின் மாபுரத்தி னுறையு மொண்பான்
சித்தர்களா லுபாசிக்கப் பட்டவனு யவரெதிரே சென்று நின்றான். ()

---

* பீ—அச்சம். § ரவம்—ஒலி.

ஆங்கவர்பா லுளத்தருள்கூர்ந் தணிமாதி யட்டசித்தி யவர்க்கு நல்கி
யோங்குமகா வுருத்திரனு யுற்பத்தி யொடுக்கமிலை யொழிந்த யோகி
பாங்குறுதன் னமிசத்தா லட்டவைர வர்கடமைப் படைத்தா னன்னோர்
தாங்கருட்பே ருவகையொடு தற்சூழ்ந்தா ரவர்திருப்பேர் சாற்றுவாமால்.

மாற்றருஞ்சீ ரசிதாங்க வைரவனே ருருவைர வன்னென் றூழ்மெய்ப்
போற்றுசண்ட வைரவனே குரோதவை ரவனேசெம் பொன்னூர்மேனி
மேற்றிகழுன் மத்தவை ரவனேகா பாலவை ரவனே வென்றி
யேற்றுயர்பீ டணவைர வன்னொடுசங் காரவை ரவனென் றெண்மர்.

வேறு.

பொற்பமரும் வடுகேச னுயிர்க ளோர்ந்திப் புனிதநெறி கைக்கொண்டு பொலியுமாறு, *தற்பரனு யனைய ரெண்மர் தமையுநீத்துச் சைலம்தின் பாங்கமர்ந்து தன்னே ரில்லோ, னற்பொடுதன் னுதிகா ரணமெய்ஞ்ஞான மறிந்திடுவான் றவமியற்று மவர்கள் போல,நற்புவியுய்ந் திடுக்றிப்பி னேற்று னுங்கே நலந்திகழும் பொலஞ்சுடர்வேன் ஞானமூர்த்தி.

அச்சமயஞ் சுவேச்சையினு னைஞ்ஞை மேற்கொண் டருகணைந்தானன்ன துகண் டன்பி னேடு, முச்சகமும் புகழ்வடுகன் பூசித்தென்றுன்முன்னமென்று முடியுமென்று மொழிதல் கேளாச், செச்சைநறுந்தொடைபுரளுந் திரண்முந் நான்கு திண்டோளான் வண்டோலஞ் செய்துசூழும், விச்சையரு ளிதழிவனஞ் சேறி யாங்குன் வேட்கைமுடி மென்றினிது விளம்பிச் சென்றான். (௩௫)

மறவர்மகண் மணக்தபுயா சலவேள் கூறு மாற்றமுள மேற்றனைய வடுகநாத, னறனவிலு மறையுருவ னுமலி நீயிங் கமர்தியென நிமலனருளாணை தந்து, திறனவில்லிங் கார்கடமைப் பூதநாதர் திரளினையங் கழைத்திதனைச்செப்பு நீவிர், பொறையிதனின் பச்சிமத்தி னமர்திர் நாமப் பொன்னிதழி மன்னுவனம் போது வோமால். (௩௬)

அவ்விதழி யடவியினி லன்பர் பூசை யாற்றியினம் வீற்றிருப்போமாங்கு நீவிர், செவ்வியநற் பிருகுதினத் திரவிற் போந்து செம்புலிகளவைகவர்ந்து திரிய வும்போங், திவ்வரையின் பச்சிமத்தி லமர்தி ரென்னு விசைத்தவரை முவேறனை யிருத்தி யாங்கே, யெவ்வாமுந் தவத்தாலேசித்தி யாமென் றெண்ணிநறுங் கடுக்கைவனத் தெய்தி னுனால் (௩௭)

* தற்பரம்—விருப்பம்.

